30th March 1961]

SRI T. S. RAMASWAMY : 1959–60, 1960–61 ஆகிய இந்த இரண்டு வருஷங்களிலே ஷெடியூல்டு வகுப்பு மாணவர்களுக்கு நிதி மிகவும் குறைவாக இருக்கிறதே ; அது சரியா ; அப்படி குறைவாக இருப்பதன் காரணம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : இருக்கிற தகவலிலே உள்ளது கொடுக்கப்பட்டிருக்கிறது. அது சரியா, சரியில்லையா என்பதை இப்போது சொல்வதற்கு இல்லை.

SRI T. S. RAMASWAMY : ஸார், இந்த 1960–61-ஆம் ஆண்டில் 20 மாணவர்களுடைய மனுக்கள் இன்னும் ஆலோசனையில் இருக்கிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. 1960–61-ஆம் ஆண்டின் அகாடமிக் ஆண்டு இப்போது முடியப்போகிறது. அவர்களுடைய விண்ணப்பங்கள் பரிசீலிக்கப் பட்டு, உதவித் தொகை வழங்கப்பட்டாதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அந்தத் தகவலும் இப்போது என்னிடத்தில் இல்லை.

*Coal transport from collieries to factories (delay)*

*1197 Q.—SRI A. A. RASHEED : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நிலக்கரிச் சுரங்கங்களிலிருந்து நிலக்கரியைக் கொண்டு செல்லும் போக்குவரத்தில் காலதாமதம் ஏற்படுவது சம்பந்தமாக தனிப்பட்ட தொழிலதிபர்களிடமிருந்து புகார் ஏதேனும் அரசினருக்கு வந்துள்ளதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : Yes, Sir. The matter has been taken up with the Government of India.

SRI A. A. RASHEED : May I know, Sir, to what extent the production in the factories have been affected for the regular supply of coal?

THE HON. SRI R. VENKATARAMAN : That is not possible to estimate. That information will be available with the private industries.

SRI M. KALYANASUNDARAM : ஸார், நமது ராஜ்யத்திற்கு ஆண்டு ஒன்றுக்கு ரயில்வே நீங்கலாக எவ்வளவு நிலக்கரித் தேவைப்படுகிறது? அவை குறித்த காலத்திற்குக் கிடைப்பதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறது? கால தாமதமாவதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : மொத்தம் நம்முடைய ராஜ்யத்திற்கு எவ்வளவு தேவைப்படுகிறது என்பதைக் கூறுவதற்கில்லை. காரணம் பல துறைகளிலே வாங்குகிறோம். பல இடங்களிலிருந்து வர வழைக்கப்படுகிறது. நம்முடைய ராஜ்யத்தில் கிடைக்காமல் போனதற்குக் காரணம் ரயில்வே வாகன்கள் குறைவாக இருக்கிறது என்று சொல்லப்பட்டது. இரண்டாவது முக்கியமான காரணம், சென்ற அக்டோபர், நவம்பர் மாதங்களிலே வடகிழக்கு ரயில்வேயில் சில தடைகள் ஏற்பட்ட தால், டெஸ்பாட்சு செய்யப்பட்டவைகள் குறித்த காலத்திற்கு வர முடியாமல் போய்விட்டது. ஆனால் இப்போது கப்பல் மூலமாக அனுப்ப வேண்டுமென்று ஏற்பாடு செய்திருக்கிறோம். மத்திய சர்க்கார் இப்போது கப்பல் மூலமாக சென்னை, தூத்துக்குடி துறைமுகங்களின் வழியாகவும், இன்னும் சுற்றி குஜராத் போகக்கூடிய ஏற்பாடுகளையும் செய்துகொண் டிருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது.